POST WITHOUT PRE-PAYMENT LICENCE NO. G. 6. TN. MS. C. P. P. 55

ANNA Leading Progressive Tamil Daily of the People

# புரட்சித்தலைவர் சபதம்

Regd. No. TN • MS (C) 244 Phone: 420212 4 பக்கம் விலை 60 காசு

அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

மலர் 10] சென்னை 31-3-1986 திங்கள் -:- வெளியூர் 1-4-1986 செவ்வாய் [இதழ் 160

## 'ஊழல் செய்பவர்கள் யாராக இருந்தாலும் அவர்கள் தூக்கியெறியப்படுவார்கள்'

### லட்சோபலட்சம்மக்கள்திரண்டகூட்டத்தில்முழக்கம்

சென்னை, மார்ச் 31 ஊழல் செய்பவர்கள் யாராக இருந்தாலும் அவர்கள் எவ்வளவு பெரிய பதவி வகித்தாலும் அவர்களைத் தூக்கி எறியத் தயங்கமாட்டேன் என்று முதல்வர் புரட்சித்தலைவர் லட்சோபலட்சம் மக்கள் திரண்ட கூட்டத்தில் கூறினார்

பொன்மனச் செம்மல் இதய தெய்வம் புரட்சித் தலைவர் வட சென்னை தண்டையார்பேட்டையில் பேசுகிறார் என்ற செய்தி கேட்டு இதயம் உள்ளவர்கள் மனம் மகிழ்ந்தனர். ஆனால்இதய மற்ற சிலர் ஏகடியம் பேசினர். ஏகடியம் பேசியவர்கள், எள்ளம் செய்தவர்களின் இறுமாப்புகளுக்கு இடி தரும் வகையில் முதல்வர் புரட்சித்தலைவர் 10 லட்சம் மக்கள் திரண்டகூட்டத்தில் பேசினார். ஒரு நிமிடம் இரண்டு நிமிடமல்ல 8நிமிட நேரம் பேசினார். புரட்சித் தலைவர் தெளிவாகவும், திருத்தமாகவும் பேசுவதைக் காது குளிர கேட்ட கழகத் தோழர்களும், பொது மக்களும் மகிழ்ச்சியில் திளைத்தனர்.

நிதியமைச்சர் டாக்டர் நாவலர் பேசி முடித்ததும் முதல்வர் புரட்சித் தலைவர் 11.10 மணிக்குமைக்முன் வந்தார். புரட்சித் தலைவர் வாழ்க, இதய தெய்வம் வாழ்க என்ற வாழ்த்து முழக்கங்கள் வங்கக் கடலையே கூட சற்றுபிரமிக்க வைக்கும்வகையில்இருந்தது.

மைக்முன்தோன்றிய முதல்வர் புரட்சித்தலைவர் தன் கழுத்திலிருந்த சால்வையை தன் இரு கைகளாலும் இழுத்து விட்டு சரி செய்து கொண்டு தனது வழக்கமான பாணியில் லாவகமாக மைக்கைப் பிடித்து-

"என்னை வாழவைக்கும் தெய்வங்களாகிய தாய்மார்களே! என்னை வழி நடத்திச் செல்லும் பெரியோர்களே! என் ரத்தத்தின் ரத்தமான உடன்பிறப்புகளே!

### உங்கள் அரசு

இந்த அரசு உங்கள் அரசு. உங்களுடைய ஆதரவை முழு மூச்சாக இந்த அரசுக்கு தரவேண்டும்என்று தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்த ஆட்சிக்குக் களங்கம் ஏற்படுத்துபவர்யாராகஇருந்தாலும், அவர்கள் தண்டிக்கப்படுவார்கள்.

(இந்த சமயத்தில் முதல்வர் புரட்சித் தலைவர் சரியாகக் கேட்கிறதா என்று மக்களிடம் கேட்டார். சரியாக கேட்கிறது என மக்கள் கோஷமிட்டனர்.)

### தக்க நடவடிக்கை

நீங்கள்யாருக்கும் எதற்காகவும் லஞ்சம் கொடுக்கக் கூடாது. எங்கு ஊழல் இருக்கிறது என்று தெரிவியுங்கள்.

உங்கள் குறைகளை என்னிடம் முறையிடுங்கள். நான் தகுந்த நடவடிக்கை எடுக்கிறேன்.

ஊழல் செய்பவர்கள் யாராக இருந்தாலும், அவர்கள் எவ்வளவு பெரிய பதவி வகித்தாலும், அவர்களைத் தூக்கி எறிய நான் தயங்கமாட்டேன்.

பதவி வகிப்பவர்கள் மக்கள் நலன் கருதி மக்களுக்காக உழைக்க வேண்டும்.

அமைச்சர்களுக்கு எந்த நம்பிக்கையின் அடிப்படையில் பதவி வழங்கப்பட்டதோ, அந்த நம்பிக்கை சிறிதும் குன்றாமல் நடக்க வேண்டும். இந்த ஆட்சி உங்கள் ஆட்சி.

உங்கள் ஆதரவை இந்த அரசுக்கு தொடர்ந்து கொடுக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

அண்ணா நாமம் வாழ்க நன்றிவணக்கம்".

இவ்வாறு முதல்வர் புரட்சித் தலைவர் பேசினார்.

கூட்டத்தில் முதல்வர் புரட்சித் தலைவர் 8 நிமிடங்கள் பேசினார்.

புரட்சித் தலைவர் பேசி முடித்ததும் பொது மக்களும் கழகத்தோழர்களும் 'புரட்சித்தலைவர் வாழ்க' 'பொன்மனச் செம்மல் வாழ்க' என்று வாழ்த்து முழக்கங்களை விண் அதிர்ந்திடும் வகையில் எழுப்பினர்.

### புரட்சித்தலைவர் முன்னிலையில் கழகத்தில்இணைந்த பேரூராட்சி தலைவர்

சென்னை, மார்ச் 31- திருநெல்வேலி மாவட்டம் கடம்பூர் பேரூராட்சி மன்ற தலைவராக சுயேச்சையாக போட்டியிட்டு வெற்றிபெற்ற பூகோளப் பாண்டியன் முதல்வர் புரட்சித்தலைவர் முன்னிலையில் கழகத்தில் இணைந்தார்.

### துவாக்குடி

துவாக்குடி பேரூராட்சித் தலைவர் எஸ். வி. பங்காருசாமி இன்று காலை தலைமைக் கழகத்தில் பொதுச்செயலாளர் இராகவானந்தம் முன்னிலையில் கழகத்தில் இணைந்தார்.

### ஆலம்பட்டி

பசும்பொன் முத்துராமலிங்கம் மாவட்டம், திருப்பத்தூர் ஊராட்சி ஒன்றியத்தைச் சேர்ந்த ஆலம்பட்டி ஊராட்சி மன்றத் தலைவர் சி. காசி தி. மு. க. வில் இருந்து விலகி பொதுச்செயலாளர் இராகவானந்தம், பொருளாளர் மாதவன் ஆகியோர் முன்னிலையில் கழகத்தில் இணைந்தார் அப்போது திருப்பத்தூர் ஊராட்சி ஒன்றியத்தலைவர் சி. தா. ராஜாசிதம்பரம் உடனிருந்தார்.



சென்னை மாவட்ட கழக சார்பில் முதல்வர் புரட்சித்தலைவருக்கு வெள்ளி செங்கோலை நினைவுப்பரிசாக மாவட்ட செயலாளர் ஜேப்பியார் வழங்கினார். படத்தில் மாவட்ட துணைச்செயலாளர் கு. க. செல்வம் மற்றும் சைதை [illegible] எம். கே. [illegible] ஆகியோர் உள்ளனர்.

# புதிய வரலாறு படைத்த வடசென்னைக் கூட்டம்

### புரட்சித்தலைவரின் உரை கேட்கக் கூடிய மக்கள் வெள்ளம்

சென்னை, மார்ச 31 முதலவா புரட்சித் தலைவர் பங்கேற்றுப பேசிய வட செனனை கூட்டத்தில் லட்சோப லட்சம் மக்கள் பங்கேற்றனர்.

பொன்மனச் செம்மல் இதயதெய்வம் டாக்டர் புரட்சித் தலைவர் பங்கேற்றுப் பேசிய வரலாற்று சிறப்புமிகு கூட்டம் வட சென்னை தண்டையாா பேட்டையில் நடை பெற்றது;

புரட்சித்தலைவர் வருகையையொட்டி வட செனனையே விழாக் கோலம் பூண்டு காட்சி அளித்தது எங்கு பார்த்தாலும் வரவேற்புவளைவுகளும புரட்சித் தலைவரை வரவேற்கும் வண்ண சுவரொட்டிகளும் தென்பட்டன். துறைமுகம் பகுதி தொடங்கி தண்டையார்பேட்டை வரை வண்ணக் குழல் விளக்குகள் சர விளக்குகள் அலங்காரம் பிரமாண்டமான முறையில் செய்யப்பட்டிருந்தது.

புரட்சித் தலைவர் பேசுகிறார் என்ற செய்திகேட்டு காலை முதலே வட சென்னை தண்டையார் பேட்டை பகுதிக்கு மக்கள் சாரி சாரியாக வரத் துவங்கினர் பிற்பகல் 3-மணிக்கு மேல் வட சென்னை பகுதியில் எங்கு சென்றாலும் மககள் வெள்ளம் தண்டையார் பேட்டை டேப்லெட் மைதானத்தை நோக்கித்தான் சென்று கொண்டிருந்தது.

கொளுத்தும் வெய்யிலையும், பொருட்படுத்தாது முதலவர் புரட்சித் தலைவரை அருகில் காண வேண்டும், அல்லது பொன்னுரை கேட்க வேண்டும் என்ற ஆவலோடு கழகத் தோழர்கள் குறிப்பாக மகளிர்கள் கழக பார்டர் அணிந்த சேலையுடன் பிற்பகல் முதலே மைதானத்திற்கு வரத் துவங்கினா.

### 4 மணிக்கே மைதானம் நிரம்பியது

டேப்லெட் மைதானம் சுமார் 5 லட்சம் மக்கள் கொள்ளக்கூடியது. பிற்பகல் 4 மணிக்கே இந்த மைதானம் நிரம்பி வழிந்தது. இப்பொழுதே

(2-ம் பக்கம் பார்க்க)



வடசென்னை தண்டையார் பேட்டையில் பொன்மனச் செம்மல் புரட்சித்தலைவரின் பொன்னுரை கேட்க கூடிய லட்சோப லட்சம் தாய்மார்கள், இளைஞர்கள் கூட்டத்தின் ஒருபகுதியினர்.



**தவம்**

இடர்களைப் பொறுத்துக் கொண்டு, தன் கடமைகளை எவன் சரிவரச் செய்கிறானோ அவன் தான் உண்மையான தவசி ஆவான்.

— பேரறிஞர் அண்ணா

**சிந்தனை**

நீ எது செய்யினும் சிந்தித்துசெய்வாயாக. மற்றவன் சொல்கிறான் என்பதற்காக அப்படியே ஒப்புக் கொள்ளாதே!

— தந்தை பெரியார்

வடசென்னை தண்டையார் பேட்டையில் மாநாடு போல் நடைபெற்ற கழக கூட்டத்தில் முதல்வர் புரட்சித்தலைவர் பேசும் காட்சி.

## நடைபாதை கடைகள் ப. உ. ச. விளக்கம்

சென்னை, மார்ச் 31— சட்டசபையில் கழக உறுப்பினர் தாமரைக்கனி கேள்விக்கு பதிலளிக்கையில் அமைச்சர் ப. உ. ச. கூறியதாவது:-

நடைபாதைகளில் உள்ள கடைகளை அகற்றுவது அல்லது வரி வசூலிப்பது போன்றவற்றை செய்வதற்கு நகராட்சிகளுக்கு சில உரிமைகள் உண்டு. அதில் அரசு தலையிட முடியாது.

ஆனால் அரசியல் காரணங்களுக்காக நடவடிக்கை எடுத்தால் அது பற்றி அரசு தக்க உத்தரவு பிறப்பிக்கும்

இவ்வாறு அமைச்சர் ப.உ.ச. கூறினார்.

# புரட்சித்தலைவர் தலைமையில் அறிவுடைநம்பி மகன் திருமணம்

சென்னை, மார்ச் 31— புலவர் அறிவுடைநம்பி மகன் திருமணம் முதல்வர் புரட்சித்தலைவர் தலைமையில் இன்று நடந்தது.

தமிழ்நாடு ஆசிரியர் வீட்டுவசதி வாரியத் தலைவர் அறிவுடைநம்பியின் மூத்த புதல்வர் பாரிக்கும். திருச்சி மத்திய சிறை கண்காணிப்பாளர் திருவீழிமிழலை மீ. சுவாமிநாதனின் புதல்வி வித்யலதாவுக்கும் இன்று காலை சென்னை சேத்துப்பட்டு குசலாம்பாள் திருமண மண்டபத்தில் திருமணம் நடைபெற்றது.

இந்த மணவிழாவில் பங்கேற்க முதல்வர் புரட்சித்தலைவர் 9.15 மணிக்கு மணமண்டபத்திற்கு வந்தார். புரட்சித்தலைவருடன் அவரது துணைவியார் ஜனாகி அம்மையாரும் மணவிழாவில் பங்கேற்றார்.

மண மண்டபத்திற்கு முதல்வர் புரட்சித்தலைவர் வந்ததும் வாழ்த்து முழக்கம் எழும்பியது. மக்களின் அன்பான வாழ்த்துக்களை பெற்றுகொண்ட முதல்வர் புரட்சித்தலைவர் 9. 20 மணிக்கு மணமக்கள் கையில் மாலையை எடுத்து தந்து மணமக்களை மாற்றச் சொன்னார். பின்னர் மங்கல நாணை மணமகன் கையில் எடுத்துத் தந்து மணமகள் கழுத்தில் அணிவிக்கச் செய்து திருமணத்தை நடத்தி வைத்தார்.

கூடியிருந்த மக்கள் மணமக்கள் வாழ்க என்று வாழ்த்து முழக்கம் எழுப்பினர்.

மணவிழாவிற்கு வந்தவர்களை வரவேற்று அறிவுடைநம்பி பேசினார். மணமக்களை வாழ்த்தி நிதியமைச்சர் டாக்டர் நாவலர், மேலவைக் கொறடா ஜேப்பியார் ஆகியோர் பேசினர்.

கழகப் பொருளாளர் மாதவன் நன்றி கூறினார்.

மணவிழாவில் பொதுச் செயலாளர் இராகவானந்தம். அமைச்சர்கள் அரங்கநாயகம், அண்டே ஆனூர் ஜெகதீசன் மற்றும் திருக்குறளார், திருப்பூர் மணிமாறன் உள்ளிட்ட பலர் பங்கேற்றனர்.

மணவிழா முடிந்து 9-45 மணிக்கு முதல்வர் புரட்சிதலைவர் மணமண்டபத்தைவிட்டு வெளியே வந்தார். அப்போது பக்கத்து மாடிகளிலிருந்த தாய்மார்கள் கையசைத்தும் இருவிரல் காட்டியும் தங்கள் மகிழ்ச்சியை தெரிவித்தனர் முதல்வர் புரட்சித் தலைவரும் அவர்கள் மகிழ்ச்சியை ஏற்கும் வகையில் கையசைத்தும் இருவிரல்களைக் காட்டியும் மகிழ்ச்சியை தெரிவித்தார்

# வரலாறு படைத்த பொதுக்கூட்ட நிகழ்ச்சி...

முதல் பக்கத் தொடர்ச்சி

மைதானம் நிரம்பி வழிகிறதே இன்னும் ஏராளமான கூட்டம் வருமே எப்படி மக்களை பாதுகாப்பது என்று குழம்பித் திரிந்த போலீசாருக்கு சிரமமில்லாமல் மைதானத்திற்கு வெளியே உள்ள சாலைகள் முழுவதும் மக்கள் லட்சக்கணக்கில் கூடி புரட்சித் தலைவரின் பொன்னுரை கேட்டனர்.

இவ்வளவு பெரிய கூட்டத்தில் ஏதேனும் அசம்பாவிதம் விளைவிக்க முடியாதா என்று எண்ணி வந்து கலகம் செய்ய முயன்ற அறுவரை போலீசார் உதவியுடன் கழகத் தோழர்கள் அப்புறப்படுத்தினர்.

### டி. வி. வசதி

நிகழ்ச்சிகளை மக்கள் கண்டு களிக்கும் வண்ணம் நூற்றுக் கணக்கான தொலைக் காட்சிப் பெட்டிகள் மைதானத்திற்குள்ளும். வெளியிலும் வைக்கப்பட்டிருந்தன வீடியோ மூலம் நிகழ்ச்சிகளை ஏக்நாத் வீடியோ நிறுவனத்தினர் மக்களுக்கு தெளிவாகக் காட்டினர்

### கலை நிகழ்ச்சி

பிற்பகல் நாலு மணி முதலே கழக கலைக்குழுவினரின் கலைநிகழ்ச்சிகள் நடைபெற்றது, வண்ணை முத்துக்குமார், டேப் நடராசன், காஞ்சி அண்ணாதாசன். பல்லவன் சீனிவாசன் ஆகியோர் உள்ளிட்டோரின் கலை நிகழ்ச்சிகள் நடைபெற்றன

நடிகர் கரிக்கோல்ராஜ் பாடகர் ராஜபாளையம் மணிசாமி. ஆகியோர் புரட்சித்தலைவர் புகழ் பாடும் பாடல்களைப் பாடினர்.

கலை நிகழ்ச்சிகள் முடிந்ததும் 7-15 மணி அளவில் கூட்ட நிகழ்ச்சி துவங்கியது. கூட்டத்திற்கு தலைமை வகிக்கும் தீர்மானத்தை முன்மொழிந்து ராதாகிருஷ்ணன் நகர் தொகுதி செயலாளர் மோகனசுந்தரம் பேசினார். இந்தத் தீர்மானத்தை வழிமொழிந்த துறைமுகம் தொகுதி செயலாளர் எம். வி. ராமன், மயிலை தொகுதி செயலாளர் எம். கே பாலன், எழும்பூர் தொகுதி செயலாளர் மா. சு. மணி, திருவல்லிக்கேணி தொகுதி செயலாளர் ஜே பாலன், தியாகராய நகர் தொகுதி செயலாளர் மூர்த்தி ராயபுரம் சோமசுந்தரம். டி ஆர். சுந்தரம், வண்ணை கிருஷ்ணமூர்த்தி. ஆறுமுகபாண்டியன் எம். சி சந்தானம் சைதை தமிழ்ச்செல்வன் ஆகியோர் பேசினர்.

கூட்டத்திற்கு தலைமைப் பொறுப்பேற்று மாவட்டச் செயலாளர் ஜேப்பியார் நிகழ்ச்சிகளை நடத்தினார் கழகப்பொதுச்செயலாளர் எஸ். இராகவானந்தம் அனைவரையும் [illegible] நிதியமைச்சர் டாக்டர் நாவலர், பொருளாளர் மாதவன், கழ[illegible] கொள்கை பரப்பு செயலாளர் செல்வி ஜெயலலிதா, துணைப் பொதுச் செயலாளர் எஸ்.ஆர். ராதா நாடாளுமன்ற துணை சபாநாயகர் தம்பிதுரை, அமைச்சர்கள் ப.உ.ச., அரங்கநாயகம், காளிமுத்து ஆகியோர் பேசினர்.

### வாழ்த்து முழக்கம்

இந்த நிகழ்ச்சியில் பங்கேற்க முதல்வர் புரட்சித்தலைவர் 10.10 மணிக்கு மேடைக்கு வந்தார் புரட்சித்தலைவரைக் கண்டதும் மக்கள் வாழ்த்துமுழக்கங்களை எழுப்பினர். மக்களின் அன்பான வரவேற்பை பெறும் வகையில் முதல்வர் புரட்சித்தலைவர் கையசைத்து தனது மகிழ்ச்சியைத் தெரிவித்தார்.

### செங்கோல்

இந்தக் கூட்டத்தில் முதல்வர் புரட்சித்தலைவருக்கு சென்னை மாவட்ட கழகத்தின் சார்பில் சுமார் ஐந்தடி உயரமுள்ள வெள்ளியில் செய்யப்பட்ட செங்கோல் வழங்கப்பட்டது மாவட்டச் செயலாளர் ஜேப்பியார் எம்.எல்,சி., துணைச் செயலாளர் கு. க. செல்வம் மற்றும் மாவட்ட பிரதிநிதிகள் முதல்வர் புரட்சித் தலைவரிடம் இதை வழங்கினர் நீதி தவறாது நடக்கும் புரட்சித்தலைவருக்கு இந்த செங்கோல் வழங்கப்படுவதாக ஜேப்பியார் கூறினார் அத்துடன் சென்னை மாவட்டக்கழகத்திற்கு கட்டிடம் வாங்குவதற்காக முதல்வர் புரட்சித் தலைவரிடம் ஒரு லட்ச ரூபாய் நிதியை மாவட்ட கழக சார்பில் மாவட்டச் துணை செயலாளர் கு க செல்வம் வழங்கினார்.

வட சென்னை சிறு வியாபாரிகள் சங்கத் தலைவரும் கழக [illegible] ஆர் சுந்தரம் 800 [illegible] தாய்மார்களுக்கு இலவசமாக புடவைகளை வழங்கினார். கொத்தவால்சாவடி சிறு கடை வியாபாரிகள் சங்கத் தலைவர் எல்லப்பன் சத்துணவு நிதிக்காக முதல்வர் புரட்சித் தலைவரிடம் ரூபாய் ஆயிரத்து ஒன்று நிதி வழங்கினார்.

11. 30 மணி அளவில் முதல்வர் புரட்சித்தலைவர் நிகழ்ச்சியை முடித்து புறப்பட்டார் அதற்கு பின் கூட்டம் கலைய நள்ளிரவு 1 மணிவரை ஆயிற்று.

---

தலைமைக் கழக அறிக்கை எண்: 31- 86

## நெல்லை நகரக் கழகத் தோழர்களுக்கு...

கழகத்தில் இருந்து நீக்கிவைக்கப்பட்டிருந்த திருநெல்வேலி நகரத்தைச்சேர்ந்த.

ஏ. சிவன்
(நெல்லை நகராட்சி உறுப்பினர்)

தனது செயலுக்கு வருந்தி தன்னை மீண்டும் கழகத்தில் இணைத்துக்கொள்ள வேண்டி நேரிலும் கடிதம் மூலமும் விடுத்த வேண்டுகோளினை ஏற்று அவர் இன்று முதல் கழகத்தில் உறுப்பினராக இணைந்து பணியாற்ற அனுமதிக்கப்படுகிறார்.

கழக நிறுவனத் தலைவர் மாண்புமிகு

முதல்வர் டாக்டர் புரட்சித்தலைவர்

அவர்களின் ஒப்புதலுடனும், பொதுச்செயலாளர் திருமிகு எஸ். இராகவானந்தம் அவர்களின் அனுமதியுடனும் இவ்வறிவிப்பு வெளியிடப்படுகிறது

சத்தியவாணிமுத்து
அமைப்புச் செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம்

சென்னை-14
31-3-86

---

# இலங்கை பிரச்சினையில் அரசியல் சுயலாபம் தேட முயலும் தி. மு. க.

## அமைச்சர் காளிமுத்து கடும்தாக்கு

சென்னை, மார்ச் 31— இலங்கைப் பிரச்சினையை முன் வைத்து அரசியல் லாபம் பெற கருணாநிதியும் அவரது கட்சியினரும் முயலுகிறார்கள் என அமைச்சர் காளிமுத்து கூறினார்.

வடசென்னை தண்டையார் பேட்டையில் மாநாடு போல் நடைபெற்ற பிரமாண்டமான கழககூட்டத்தில் பங்கேற்று அமைச்சர் காளிமுத்து பேசுகையில் கூறியதாவது:—

உள்ளாட்சித்தேர்தலுக்கு பின் கழகம் கலகலத்து விட்டது அடிதளம்தகர்த்துவிட்டது புகழொளிமங்கி விட்டதுஎன புலம்பித்திரிபவர்கள் இந்தக் கூட்டத்தைப் பார்த்தாலே நாட்டின் நடப்பைப் பற்றி தெரிந்து கொள்வார்கள் என்று கருதுகிறேன்

வாடா வண்ண மலராய் வற்றாத ஜீவ நதியாய் தூங்கா விளக்காய் இருக்கும் திராவிட இயக்கத்தின் இதய கீதமாக புரட்சித் தலைவர் விளங்குகிறார்.

ஊசிப்போன பண்டமாக திரிந்தபாலாக, உடைந்து போன விளக்காக இருக்கும் தி.மு.க செல்வாக்கு பெற்றுது விட்டது போல பேசுகின்றனர். புதுவாழ்வுகிடைத்ததாக நினைக்கிறார்கள் அது பார்க்க பெரிதாக தெரியும் பஞ்சுமிட்டாய் என்பதை அவர்கள் புரிந்துகொள்ள வேண்டும் சுயேச்சைகள் அதிகம் வெற்றி பெற்ற ஒரு தேர்தலில் மூன்றாவது இடத்திலுள்ள ஒரு கட்சி வெற்றி பெற்றதில் ஆச்சரியமில்லை

### ஓடாத கடிகாரம்

ஓடாத கடிகாரம் நாளுக்கு இருமுறை சரியான நேரத்தைக் காட்டும். உள்ளாட்சி தேர்தலில் தி. மு க பெற்ற வெற்றி தற்காலிகமானதுதான். ஆனால் ரிப்போ ரிப்போர் தான்.

நாங்கள் வெற்றி பெற்றிருக்கிறோம். அடக்கமாக இருக்கப் போகிறோம்

என்று கருணாநிதி கூறியிருந்தார். அவரே அடகத்தை விட்டு விட்டுப்பேச ஆரம்பித்திருக்கிறார் திமுகவின் வெற்றியைப் பார்த்து அமெரிக்கா திகைத்து நிற்பதாகவும், ஐரோப்பா நாடு ஆச்சரியப்படுவதாகவும் பேசி இருக்கிறார் ஐரோப்பா என்பது ஒரு நாடல்ல. அது ஒரு கண்டம் எப்படிப்பட்ட இறுமாப்புடன் அவர் பேசி இருக்கிறார் என்பதற்கு இதுவே சான்று

### அமைச்சரானது எப்போது?

திண்டுக்கல் நகரசபை ஓய்வு இல்லத்தில் தங்க அமைச்சர் ஒருவர் செல்கிறார். அவருக்கு அனுமதி மறுக்கப்படுகிறது. அதைப் பற்றி பத்திரிகை நிருபர்கள் கருணாநிதியிடம் கேட்க அதுபற்றி தனக்கு தெரியாது என்றும் அமைச்சர்களுக்கு தங்க இடம் தருவதில்லை என்று நகர சபைகள் தீர்மானம் போட்டால் அதைப் பரிசீலிக்க சொல்வதாகவும் கூறியிருக்கிறார் உள்ளாட்சிதுறைக்கு அண்ணன் ப.உ.ச. அமைச்சராக உள்ளார். எப்போது கருணாநிதியை முதல்வர் புரட்சித் தலைவர் துணை அமைச்சர் ஆக்கினார் என்று தெரியவில்லை

(பலத்த சிரிப்பு)

கழகத்தை அசைத்துவிடலாம் என்று எவராவது தவறாக கருதினால் அது நிச்சயம் நிறைவேறாது தி. மு க வுக்கு கிடைக்கும் வெற்றி ஆறுதல் பரிசு தான் என்றும் முதல் பரிசு புரட்சித் தலைவருக்குத் தான் தமிழ் மக்களுக்காக ஆக்கபூர்வமாக பணியாற்றுபவர் புரட்சித் தலைவர்.

இலங்கைத்தமிழர் பிரச்சினையில் புரட்சித்தலைவர் எடுத்த நடவடிக்கைகளினால் தான் பேச்சுவார்த்தையில் முன்னேற்றம் ஏற்பட்டது. இதை தனக்கு பயன்படுத்திக் கொள்ள கருணாநிதி எண்ணுகிறார். காற்றடித்தால் மரம் அசையும். அந்தமரம் அசைவதைக் கண்ட மரத்திலிருக்கும் ஓணான் தன்னால்தான் மரம் அசைந்ததாக நினைப்பது போல இது உள்ளது

### யாருமே வெல்ல முடியாது

கருணாநிதி புரட்சித் தலைவர் உடல் நலம் பெற்று திரும்ப வேண்டும். என்று ஏன் விரும்பியதாக கூறி இருக்கிறார்? முதலில் நண்பர் என்ற முறையிலும் இரண்டாவதாக யாருமே வெல்ல முடியாத புரட்சித் தலைவரை வென்று காட்ட வேண்டும் என்பதற்காகவும் புரட்சித்தலைவர் உடல் நலம் பெற்று திரும்ப வேண்டும் என்று விரும்பினாராம்.

கிழக்கே உதிக்கும் சூரியன் மேற்கே உதித்தாலும் அது நடக்காது புரட்சித்தலைவரை வெல்லகூடிய சக்தி கருணாநிதிக்கு இல்லை என்பதை நிரூபித்துக்காட்டுவோம்

தோல்வியைக் கண்டு தொட்டால் சிணுங்கியைப் போல் சுருங்குபவர்களோ வெற்றியைக் கண்டு விலா நோகச் சிரிப்பவர்களோ அல்ல நாம். அக்கினியையே விழுங்கியவர்கள் அல்லித் தண்டையா விழுங்க மாட்டோம்?

கருணாநிதி விடுத்த அறைகூவலை ஏற்போம். இது ஒரு எஃகுக்கோட்டை என்பதை நிரூபிப்போம்.

இவ்வாறு அமைச்சர் காளிமுத்து பேசினார்.

---

## ஜப்பானில் நூறு வயதை தாண்டிய 1,740 பேர்

டோக்கியோ, மார்ச் 31— நூறுவயதுக்கும் மேற்பட்டவர்கள் ஜப்பானில் ஏராளமான பேர் இருக்கிறாகள்.

சென்ற ஆண்டு செப்டம்பர் நிலவரப்படி நூறு வயதைத் தாண்டியவர்கள் ஜப்பானில் ஆயிரத்து 740பேர் கடந்த 1984ஆம் ஆண்டை விட இந்த எண்ணிக்கை 177 அதிகம். 100வயதைக் கடந்தவர்களில் பெண்களின் எண்ணிக்கை ஆயிரத்து 381 மொத்த எண்ணிக்கையில் இது 79.4 சதவிகிதம்.

## அசோக்நகர் வியாபாரிகள் சங்க விழா

சென்னை, மார்ச் 31— அசோக்நகர் வியாபாரிகள் சங்கம் முதல் ஆண்டு நிறைவு விழா இன்று 31-ந் தேதி, மாலை அசோக் நகர் பேரறிஞர் அண்ணா திருமணக் கூடத்தில் பத்ரிநாராயணன் தலைமையில் வளர்மதி எம்.எல்.ஏ. முன்னிலையில் நடைபெறுகிறது. இவ்விழாவில் நிதி அமைச்சர் டாக்டர் நாவலர் கலந்து கொண்டு விழாமலரை வெளியிட தமிழ்நாடு ஓட்டல் சங்கத்தலைவர் புருஷோத்தமன் அதை பெற்று[illegible] பெற்றுக் கொள்கிறார்.

அமைச்சர்கள் நல்லுசாமி யூசுப் மற்றும் பலர் கலந்து கொண்டு [illegible] [illegible] வேற்புரை [illegible] இரவு [illegible] இன்னிசை [illegible] பெறுகிறது

---

# கற்பனை வாதிகளின் புரட்டுச் செய்திகள்: ராகவானந்தம் கண்டனம்

சென்னை, மார்ச் 31- கழக செயற்குழு பொதுக்குழு பற்றி கற்பனை வாதிகள் பொய் செய்தி வெளியிட்டமைக்கு கழக பொதுச் செயலாளர் எஸ். இராகவானந்தம் கண்டனம் தெரிவித்தார்.

சென்னை தண்டையார் பேட்டையில் மாநாடு போல் நடைபெற்ற கழகக் கூட்டத்தில் பங்கேற்று அனைவரையும் வரவேற்று பொதுச் செயலாளர் எஸ். இராகவானந்தம் பேசுகையில் கூறியதாவது:-

கடந்த இரு தினங்களாக கழக செயற்குழு பொதுக்குழு கூடி முடிந்துள்ளது: கழகத்தின் பொதுச் செயலாளர் என்ற வகையில் எல்லா இதழ்களையும் படிக்கிறேன் பத்திரிகைகளில் செய்தி பத்திரிகை, கருத்து பத்திரிகை என்ற இருவகை உண்டு சில பத்திரிகைகளில் தலையங்கம் எழுதுகிறார்கள். நான்கு சுவருக்குள் உட்கார்ந்து கொண்டு தங்கள் கற்பனைகளை எழுதிவிட்டு இது தான் மக்கள் கருத்து என்பது போல சொல்ல நினைக்கின்றனர்.

கடந்த சில நாட்களாக எவ்வளவு கற்பனை செய்திகளை பொய்ச்செய்திகளை வெளியிட முடியுமோ அவ்வளவையும் வெளியிட்டனா. ஆனால் அவர்களது எண்ணங்களுக்கு மாறாக கழக செயற்குழு, பொதுக்குழு சிறப்பாக நடந்தது

புரட்சித்தலைவர் என்று மக்கள் பார்க்கும்போது புரட்சித் தலைவருக்கு வெற்றி செய்யாறு சட்டமன்ற தேர்தலில் கடந்த தேர்தலை விட 5 ஆயிரம் வாக்குகள் கழகத்திற்கு அதிகம் தந்து மக்கள் வெற்றி பெறச் செய்தனர், மற்ற தேர்தல்களை மக்கள் வேறு கோணத்தில் பார்க்கிறார்கள்.

எந்த தேர்தலானாலும் புரட்சித்தலைவருக்கு ஈடுபாடு உண்டு என்பதை மக்களிடம் எடுத்துச் சொல்ல வேண்டும் என்பது பற்றி பேசி இருக்கிறோம்.

எல்லோரும் மனம் விட்டு பேசியதாக கூறினார்கள். அடுத்து என்ன செய்ய வேண்டுமென்பது பற்றி புரட்சித்தலைவர் அறிவித்திருக்கிறார்.

இவ்வாறு பொதுச் செயலாளர் இராகவானந்தம் பேசினார்.

## போலீஸ்நிலையம் மீது குண்டுவீச்சு

அமிர்தசரஸ், மார்ச் 31- பஞ்சாப் மாநிலம் அமிர்தசரஸ் போலீஸ் நிலையம் மீது சீக்கிய தீவிரவாதிகள் 2 திராவக குண்டுகளை வீசினர்.

குண்டு வீசியோர் மீது போலீஸ்காரர் ஒருவர் சுட்டார். ஆனாலும் அவர்கள் தப்பிச் சென்று விட்டனர்.

## 2-வது அணுமின் நிலையம்: பிரதமருக்கு புரட்சித்தலைவர் கடிதம்

சென்னை, மார்ச் 31— நிதிநிலை அறிக்கை மீது சட்டப்பேரவையில் நடந்த 8 நாள் பொது விவாதத்துக்கு அவை முன்னவர் டாக்டர் நாவலர் இன்று பதிலுரை அளித்தார்

டாக்டர் நாவலர் பதிலுரை வருமாறு:-

தமிழகத்தில் இரண்டாவது அணுமின் நிலையம் அமைக்க வேண்டுமென்று முதல்வர் புரட்சித்தலைவர் பிரதமர் ராஜீவிற்கு கடந்த 17—ந்தேதி கடிதம் எழுதினார். அதற்கு பிரதமரிடமிருந்து 20, 21ல் பதில் வந்துள்ளது.

இது குறித்து அமைக்கப்பட்டுள்ள கூட்டு கூட்டம் நடைபெற இருக்கிறது. அந்தக் கூட்டத்திற்கு பிறகு இது பற்றி பரிசீலிக்கப்படுமென்று பிரதமர் எழுதி இருக்கிறார். இரண்டாவது அணுமின்நிலையம் அமைவதன் மூலம்தான் நம் மின்சார தேவையை பூர்த்தி செய்ய இயலும்

தொழில் துறையில் பல வகைகளில் நாம் இரண்டாவது மூன்றாவது ஐந்தாவது இடங்களில் இருக்கிறோம். 86-87ல் 87கோடி ரூபாயில் பல புதிய தொழில்கள் தொடங்கப்பட இருக்கிறது 15புதியதொழில்கள் ரூபாய் 775 கோடியில் உருவாக நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளது. மணலியில் 3[illegible]0 கோடி ரூபாய் செலவில் பெட்ரோ கெமிக்கல் காம்ப்ளக்ஸ் அமைக்க நடவடிக்கை எடுக்கப்பட்டு வருகிறது.

### சாராயக்கடை ஒழிப்பு

1987 ஜனவரி முதல் தேதி முதல் கள், சாராய கடைகள் முதல் கட்டமாக ஒழிக்கப்படும் இதன்மூலம் இந்த ஆண்டில் 60 கோடி ரூபாய் இழப்பு ஏற்படும். ஆண்டு முழுவதும் 250 கோடி இழப்பு ஏற்படும் மத்திய அரசு உதவி தராவிட்டாலும் அந்த கொள்கை அமல் நடத்தப்படும் மத்திய அரசிடமிருந்து உதவி வர நாம் எல்லோரும் சேர்ந்து குரல் கொடுக்க வேண்டும்.

சத்துணவு கூடங்களை மேற்பார்வையிட உள்ளாட்சி அமைப்புகள் குழுக்களை நியமிப்பது நல்லது.

எந்தெந்த மாவட்டங்களில் வறட்சி ஏற்பட்டிருக்கிறதோ அது குறித்து மாவட்ட ஆட்சித் தலைவர்களது அறிக்கை பெறப்பட்டு வரிதள்ளுபடி, நிவாரண உதவிகள் செய்யப்படும்

இவ்வாறு டாக்டர் நாவலர் பேசினார்.

# புரட்சிதலைவருக்கே மக்கள் ஆதரவு

## தண்டையார்பேட்டை கூட்டத்தில் டாக்டர் நாவலர் முழக்கம்

சென்னை, மார்ச் 31- உள்ளாட்சித் தேர்தல் முடிவுகளால் புரட்சித்தலைவருககு செல்வாக்கு சிறிதளவும் குறையவில்லை, மக்கள் ஆதரவு என்றும் புரட்சித்தலைவருக்கே என தண்டையார் பேட்டையில் நடந்த பிரமாண்டமான கழகக் கூட்டத்தில் பேசுகையில், நிதியமைச்சர் டாக்டர் நாவலர் கூறினார்.

சென்னை தண்டையார் பேட்டையில் நேற்றிரவு நடந்த கழக பொதுககுழு தீர்மான விளக்கப் பொதுக் கூட்டத்தில் டாக்டர் நாவலர் பேசியதாவது:-

"1973-ம் ஆண்டுக்குப் பிறகு நடைபெறற எந்தப் பொதுத் தேர்தலாக இருந்தாலும் சரி, இடைத் தேர்தலாக இருந்தாலும் சரி அதில் எல்லாம் கழகம் வெற்றி பெற்று வந்திருக்கிறது.

சமீபத்தில் நடந்த பஞ்சாயத்து நகரசபைத்தேர்தல்களில் கழகத்துக்கு எதிர்பார்த்த வெற்றி கிடைக்கவில்லை. ஆனால், தி மு க வுக்கு எதிர்பாராத வெற்றி கிடைதது இருக்கிறது.

ஆனால் இந்த தேர்தல் ஒரு முதலமைச்சர் அல்லது ஒரு பிரதமரை தேர்ந்தெடுக்க நடைபெற்ற தேர்தல் அல்ல பல நகரசபை தலைவர்களை பல பஞ்சாயத்து யூனியன் தலைவர்களை தேர்ந்தெடுக்க நடைபெற்ற தேர்தல்.

"இந்த தேர்தல் முடிவு காரணமாக புரட்சித் தலைவர் செல்வாக்கு மங்கி விட்டது; மக்கள் நம்பிக்கையை இழந்து விட்டார்கள்" என்று கூறுவது உண்மை அல்ல.

அப்படிம்பட்ட நிலைமை ஏற்பட்டிருக்கிறது என்று பிரமையை உருவாக்க சிலர் நினைக்கிறார்கள் இந்த தேர்தல் முடிவு புரட்சித் தலைவரின் தனி செல்வாக்குக்கு ஏற்பட்ட தாழ் நிலை அல்ல"

இவ்வாறு அமைச்சர் நாவலர் பேசினார்.

## வால்பாறை: அண்ணா நம்பி மக்கள் குறை கேட்டார்

கோவை, மார்ச், 31- பொள்ளாச்சி நாடாளுமன்ற கழக உறுப்பினர் அண்ணாநம்பிவால்பாறை தொகுதியில் வால்பாறை ஸ்டோனிமோர் எஸ்டேட், வாட்டாபால்ஸ், ரொட்டிக் கடைகவரகல்அட்டைகட்டி உள்பட 25 கிராமங்களுக்குச்சென்று மக்களைச் சந்தித்து குறைகளைக் கேட்டார்.

ஆயிரத்திற்கு மேற்பட்ட மக்கள் அண்ணாநம்பியிடம் மனு கொடுத்தனர், இவற்றை வால்பாறை நகரியக் கூட்டத்திற்கு வந்திருந்த மாவட்ட ஆட்சித் தலைவர் அபுல்ஹாசனிடம் அளித்து உரிய நடவடிக்கை யெடுக்கச் சொன்னார்

அண்ணாநம்பி எம் பியுடன் நகரிய தனி அதிகாரி ஒன்றிய வட்டார வளர்ச்சி அதிகாரி திரு ஞானசம்பந்தம், வால்பாறை வட்ட ஆட்சியாளர் மற்றும் கழக பிரமுகர்கள் செ. சுபா நகரச் செயலாளர் சர்புதீன், அட்டைகட்டி கண்ணன். நகர துணைச் செயலாளா ஆறுமுகம், கோவை காளிமுத்து மன்ற செயலாளர்மோகன்மாவட்டப்பிரதிநிதி புரட்சித்தம்பி மாணவர் அணிச் செயலாளர் வை. முத்தையா மகளிர் அணி சார்பில் நகரியக்குழு உறுப்பினர் ஸ்டெல்லா அந்தோணி, நகரியக்குழு உறுப்பினர் ராஜசின்னையன், காங்கிரஸ் சார்பில் வட்டார காங்கிரஸ் தலைவர் நல்லமுத்துராஜமாணிக்கம் மற்றும் பலர் உடன் சென்றனர்.

## பியர்லெஸ் நிறுவனத்தை அரசுடைமையாக்க உண்ணா விரதம்

சென்னை, மார்ச் 31- தி பியர்லெஸ் ஜெனரல் பைனான்ஸ் & இன்வெஸ்ட்மெண்ட் கம்பெனி லிமிடெட் நிறுவனத்தை அரசுடமை யாக்கக் கோரி அதன் 100க்கும் மேலான சென்னை கிளைஊழியர்களும் (பியர்லெஸ் கர்மசாரிசமிதி-(ஐ என்.டி யு.சி( மற்றும் அதன் அதிகாரிகள் மெரினாகடற்கரை உழைப்பாளர் சிலை அருகில் 26ம் தேதி ஒருநாள் அடையாள உண்ணாவிரதத்தை ஜெ. நாகராஜ தலைமையில நடத்தினார்கள்.

இந்த உண்ணாவிரதத்தைத் தொழிற்சங்கத் தலைவர்கள் ஆர் ரெங்கசாமி எம்.எல்.ஏ.[காங்-இ.] மற்றும் கே. பழனிச்சாமி ஆகியோர் துவக்கிவைத்தனர்.

மேலும் இந்திய தொழிற்சங்கத் தலைவர்கள் எஸ். கிருஷ்ண மூர்த்தி ஜி. ஆனந்த ரெங்காராவ் ஆர். சி பி. முருகேசன், ஞானசிலன் வரதன் இந்த உண்ணாவிரதத்தில் பங்கேற்றனர்.

## சாலமன் பள்ளி ஆண்டுவிழா

சென்னை, மார்ச் 31— சென்னை ராயப்பேட்டை சாலமன் ஆங்கிலப் பள்ளியின் 13-வது ஆண்டு நிறைவுவிழா இன்று 31-ந் தேதி மாலை உட்லண்ட்ஸ் ஓட்டலில் நடைபெறுகிறது இவ்விழாவில் அமைச்சா கே. ஏ கே. கலந்து கொண்டு மாணவர்களுக்கு பரிசுகளை வழங்குகிறார். அக்ரோ தலைவர் லியாகத் அலிகான், தமிழ்நாடு இளைஞர் காங்கிரஸ் செயலாளர் இனியன்சம்பத் மற்றும் பலர் கலந்து கொள்கின்றனர்.



## மக்கள் குறை கேட்டார் பிள்ளைப்பாக்கம் மூர்த்தி

ஸ்ரீபெரும்பூதூர், மார்ச் 31— ஸ்ரீ பெரும்பூதூர் வராட்ஜ ஒன்றிய பெருந் தலைவர் பிள்ளைப்பாக்கம் கே. மூர்த்திக்கு செல்லம் பட்டறை கண்டராம்பட்டு மற்றும் காலனிகளில் வரவேற்பு அளிக்கப் பட்டது.

அப்பகுதிகளில் உள்ள மக்கள் குறைகளை மூர்த்தி கேட்டறிந்தார்.

செல்லமபட்டறை கிராம பஞ்சாயத்து தலைவர் தாமஸ் வரவேற்பு நிகழ்ச்சிக்கு தலைமைதாங்கினார். துணைச்சப்பகுதி அவைத் தலைவர் மண்ணடி கிருஷ்ணமூர்த்தி மற்றும் கழக ஒன்றிய தலைவர் டி. பி கோவிந்தசாமி துணை செயலாளர் இரா. குமார வடிவேலு, மொளச்சூர் கிராமப் பஞ்சாயத்து தலைவர் சின்னப்பா, பட்டாசி. எஸ் இ. அக்பர் அலி, பெருமாள் ஆகியோர் பாராட்டி பேசினார்கள்.

சாலை போடுதல் தெரு விளக்கு. குடிநீர் ஆகிய பிரச்சினைகள் குறித்து கிராம மக்கள் அளித்த கோரிக்கைகளைஏற்றுசிறப்பான முறையில் செயல் படுவேன் என்று பிள்ளைப்பாக்கம் மூர்த்தி உறுதி தெரிவித்து பேசினார்.

## புரட்சித்தலைவரின் உருக்குக் கோட்டையாக விளங்கும் கழகம்

### செல்வி ஜெயலலிதா எம். பி. பேச்சு

சென்னை, மார்ச் 31— முதல்வர் புரட்சித் தலைவரின் உருக்குக் கோட்டையாக கழகம் விளங்குகிறது என. செல்வி ஜெயலலிதா எம் பி கூறினார்.

தண்டையார் பேட்டையில நடந்தபிரமாண்டமான கழக கூட்டத்தில் கலந்து கொண்டு கழக கொள்கை பரப்புச்செயலாளர் செல்வி ஜெயலலிதா பேசினார். அவர் பேசும்முன் முதல்வர் புரட்சித்தலைவர் காலை தொட்டு வணங்கிவிட்டு பின்னர் பேசினார்.

அவர் பேசியதாவது:

நீண்ட காலத்துக்குப் பிறகு நீண்ட இடைவெளிக்குப்பிறகு சென்னை நகர மக்களாகிய உங்களை சந்திக்கும்வாய்ப்பு எனக்கு கிடைத்து இருக்கிறது இந்த வாய்ப்பைத்தந்தது இதயதெய்வம் புரட்சித் தலைவர்தான் அவருக்கு நன்றியை தெரிவிக்கக் கடமைப் பட்டிருக்கிறேன்

முதல்வர்புரட்சித்தலைவர் பேசச் சொன்னால் பேசுவேன். பேசாதே என்றால் பேசமாட்டேன் புரட்சித் தலைவரே எனக்கு தேவன் அவர் சொல்லே எனக்கு வேதம்.

நேற்றும் இன்றும்செயற்குழு, பொதுக்குழுக்கூட்டங்கள சிறந்த முறையில் நடந்து முடிந்து இருக்கின்றன். ஒருசிலர் என்னென்ன கற்பனைகள், எப்படியெல்லாம. மனக்கோட்டை கட்டினார்கள் பாவம்அவர்கள் ஏமாந்து விட்டார்கள்.

புரட்சித்தலைவரை 22 ஆண்டுகளாக எனக்கு தெரியும் 1964 முதல் புரட்சித்தலைவருக்கு என்னை தெரியும். என்னை பற்றி யார் என்ன சொன்னாலும் நான் கவலைப்படுவதில்லை காரணம் புரட்சித் தலைவருக்கு என்னைப் பற்றித்தெரியும்.

கழகத்திற்கு புதிய வலிவும், பொலிவும் தெம்பும் ஏற்பட்டிருப்பதாக எனக்கு முன் பேசியவர்கள் குறிப்பிட்டார்கள் அது என்றும் எஃகு கோட்டைதான் வலிமை இழந்து விடவில்லை.

நடநதுமுடிந்தஉள்ளாட்சி தேர்தலுககுபிறகுஎதிர்கட்சிகளும், தி மு.க.வும் என்ன வெல்லாமோ பேசுகிறார்கள் குறிப்பாக கருணாநிதி தமிழகத்தையே கைப்பற்றி விட்டதைப் போல் பேசுகிறார். கோட்டையைப் பிடித்து விடுவோம் என்று பேசி வருகிறார்.

### மனக் கோட்டை

அது வெறும் மனக் கோட்டைதான என்றும் அது நிறைவேறாது தமிழகத்தில் என்றைக்கும் புரட்சிதலைவர் ஆட்சிதான். கார் உள்ளளவும்; கடல் நீர் உள்ளவும் அவர்தான் முதல் அமைச்சா

உள்ளாட்சித் தேர்தலில் கழகத்துக்கு ஓரளவு பாதிப்பு ஏற்பட்டது என்பது உண்மைதான இது எதனால் ஏற்பட்டது? அதைத்தான் அனைவரும் சரியாக புரிந்து கொள்ள வேண்டும்.

புரட்சித் தலைவருக்கு செல்வாக்கு குறைந்து விட்டதா? புகழ் மங்கிவிட்டதா? நீங்களே சொல்லுங்கள் (கூட்டத்தினர் "இல்லை இல்லை" என்று குரல்எழுப்பினர்.)

புரட்சித்தலைவர் புகழ் குன்றிமணி அளவுகூட குறையவில்லை, உள்ளாட்சித் தேர்தலில் புரட்சிதலைவர் சென்று இரு விரலைக் காட்டியிருந்தாலும் வெற்றி பெற்று இருப்போம். திமுகவுக்கு வெற்றி கிடைத்து இருக்காது

### குடும்ப ரகசியம்

புரட்சித் தலைவர் ஏன் செல்லவில்லை?

அவருக்குஉடல் நலம் சரி இல்லை என்கிறார்கள் அது தவறு அவர் நன்றாகத் தான இருக்கிறார் அண்மையில் நடநத ஒரு விழாவில் 6 பேர் சுமந்த மாலையை புரட்சித்தலைவர் அநாயாசமாக தூக்கினார் என்றும் 3 போ சுமந்த கல்லை அவர் ஒருவரே தூக்கி பிடித்தார் என்றும் செய்திகள் வந்தன அப்படி இருக்கும்போது ஏன்செல்லவில்லை?

நான் இப்போதுசொல்லப் போவது பரமரகசியம் குடும்ப ரகசியம். அதை சொல்வதற்குமுன்பு புரட்சித் தலைவரிடமும் மன்னிப்பு கேட்டு கொள்கிறேன்,

கடந்த 1½ ஆண்டாக கழக குடும்பத்தில் ஏதோ ஒரு பிளவு இருப்பது போன்று எங்களிடம் கருத்து வேறுபாடு கோபதாபங்கள் இருப்பதுபோல் ஒரு தோற்றம் தெரிந்தது. இதனால் புரட்சித்தலைவர் மன வருத்தம் அடைந்தார்.

புரட்சித்தலைவர்எங்களுக்கு எல்லாம் பாடம் புகட்ட நினைத்தார். அதனால் தேர்தல் பிரசாரத்துக்குஅவா செல்லவில்லை எனவே சில இடங்களில் கழகம தோல்வி கண்டது.

புரட்சிததலைவர்சென்று வந்திருந்தால் கழகம மகத்தான வெற்றி பெற்றிருக்கும்.

### ஒற்றுமையுடன் செயல்படவேண்டும்

எங்களுக்குள் இருந்து வந்த கருத்து வேறுபாடு மறையவேண்டும் பேதங்கள் விலக வேண்டும்ஒற்றுமையின்மையில் இருந்து விடுபட்டு ஒற்றுமையுடன் செயல்படவேண்டும் என்று எங்களுக்கு எல்லாம் பாடம புகட்ட இப்படி செய்தார.

இதய தெய்வம் இல்லை என்றால் சமுதாயத்தில் மக்கள் மத்தியில் எங்களுக்கு எந்த மதிப்பும் மரியாதையும் இல்லை என்பதை புரட்சித்தலைவர் உணர்த்திவிட்டார்

### அடிக்கும் கைதான்...

ஒரு தாய் தன் குழந்தைக்குப் பாடம் புகட்ட அடிப்பார் அப்போது அந்தத் தாய்க்குவேதனையாகதான் இருக்கும். குழந்தையை நல்வழிக்கு கொண்டு வருவதற்காக அந்தத் தாய் இப்படி செய்வார் அடிக்கிற கைதான் அணைக்கும்.

இந்த தேர்தலால் எந்த பாதிப்பும் ஏறபடாது என்பது புரட்சித்தலைவருக்கே தெரியும். அதனால் தான் எங்களை சோதித்தார் எதை உணர்த்த வேண்டுமோ அதை உணர்த்துவதில் முழு வெற்றி கண்டுவிட்டார்.

எங்களை பொறுத்தவரை ஒரே லட்சியம். ஒரே சிந்தனை ஒரே எண்ணம் புரட்சித்தலைவரின் புகழை நிலை நாட்டுவது என்றும் புரட்சிதலைவா "எஃகு" கோட்டை என்றும் அவர்தான முதல்வர் என்று நிலை நாட்டுவது என்பதுதான் எங்களது கொள்கை' இந்த லட்சியத்தில் மாற்றம்இருக்காது

இவ்வாறு செல்வி ஜெயலலிதா கூறினார்.

## அண்ணா பெயர் கூடாதாம்: தி. மு. க. அடாவடி நீடிக்கிறது

திருநெல்வேலி மார்ச் 31—ஒருதிருமண மண்டபத்திற்கு அறிஞர் அண்ணா பெயர்சூட்ட தி மு க வினர் எதிர்ப்பு தெரிவித்தனர். கருணாநிதி பெயரே வைக்கவேண்டும அண்ணா பெயா வேண்டாம் என்று அவர்கள் கூறினர்.

திருநெல்வேலி நகர சபைக்கூட்டம் கடந்த வியாழனன்று நடைபெற்றது. இந்தக்கூட்டத்தில் ஒரு திருமண மண்டபத்திறகு அண்ணா பெயர் சூட்ட தீர்மானம் கொண்டு வரப் பட்டது இதற்கு தி.மு க. வினர் எதிர்ப்பு தெரிவித்தனர் பின்னர் தீர்மானம்அதிமுக கழக உறுப்பினர்களின் ஆதரவுடன் நிறைவேற்றப் பட்டது அந்த மண்டபத்திற்கு முன்பு கருணாநிதியின் பெயர் சூட்டப்பட்டு இருந்தது.

எங்கும எதிலும் தனது பெயரும் தன் குடும்பத்தினர்பெயரும்இருக்கவேண்டும்என்று எண்ணிச் செயலபட்ட கருணாநிதி ஆட்சிக் காலத்தில் இந்தப் பெயா சூட்டபபட்டது.

அண்ணாவின் புகழை மறைத்துத் தன் பெயரை நிலைநாட்ட கருணாநிதி செய்த முயற்சி இது அண்ணாவின் புகழை நிலை நாட்டிய புரட்சித் தலைவரின் தம்பிகள் நெல்லை நகர சபையிலும் கூரல்ழுப்பி அண்ணாவின் பெயரை மண மண்டபத்திற்கு சூட்டும் தீர்மானத்தைக் கொண்டு வந்து நிறைவேற்றிக்காட்டியுள்ளனர்.

சேலத்தில் ஒரு திருமண மண்டபத்துக்கு அண்ணாவின் பெயரைப் புறக்கணித்து கருணாநிதி பெயரை திமுக நகரசபைத் தலைவர் வைத்தது தெரிந்ததே.





Edited and Published by K. RAVINDRAN on behalf of Thangamani Publications and Printed by All India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34' Nelson Manickam Road MADRAS-29.

# நலிந்த பிரிவினருக்கு ரூ. 28 கோடி கடனுதவி: ஸ்டேட் பாங்கு தீவிரம்

சென்னை, மார்ச் 31— தமிழகத்தில் ஏழைஎளிய மக்கள் மற்றும் நலிந்த பிரிவினருக்கு நடப்பு ஆண்டில் ரூபாய் 28 கோடி வரை கடனுதவி செய்ய பாரத ஸ்டேட் பாங்கு திட்டமிட்டுள்ளது என்று வங்கியின் தலைமை பொது மேலாளர் கே. மார்க்கபந்து கூறினார்.

20 அம்சத் திட்டத்தின் கீழ் தமிழகத்தில் பாரத ஸ்டேட் பாங்கு பல்வேறு வகைகளில் கடனுதவி செய்து வருகிறது. கிராம மக்களின் பொருளாதாரத்தை முன்னேற்றம் செய்யும் பல்வேறு திட்டங்களையும் பாரத ஸ்டேட் பாங்கு செயல் படுத்தி வருகிறது.

சென்னையில் இருந்து பத்திரிகையாளர்கள் பலர் செங்கற்பட்டு, தென்னாற்காடு, மாவட்டங்கள் மற்றும் பாண்டிச்சேரிமாநிலம் ஆகியவற்றில் சுற்றுப் பயணம் செய்து வங்கியின் கடனுதவி திட்டங்கள் சீரிய முறையில் செயல் படுத்தி வருவதை நேரில் பார்த்தனர்.

## மார்க்கபந்து தகவல்

பத்திரிகையாளர்களுக்கு நேற்று மாலை சென்னையில் பேட்டி அளித்த பாரத ஸ்டேட் பாங்கின் தலைமை பொது மேலாளர் கே. மார்க்கபந்துகூறியதாவது:-

தமிழகம், கேரளம்'பாண்டிச்சேரி ஆகிய மாநிலங்களில் சென்ற ஆண்டு (1985) ரூபாய் 20 கோடி வரை ஏழை எளிய மக்களுக்கு கடனுதவி செய்யப்பட்டுள்ளது. சுமார் ஒருலட்சத்து 53ஆயிரம் பேர் இந்த திட்டத்தின் மூலம் பயனடைந்துள்ளனர்.

சிறு தொழில்செய்வோர், பால் உற்பத்தியாளர் பானை செய்யும் குயவர், கால்நடை, உழவு மாடுகள் வைத்து வேளாண்மையில் ஈடுபடும் விவசாயிகள் படித்துவிட்டு வேலையில்லாமல் இருந்த பட்டதாரி இளைஞர் ஊனமுற்றோர் இப்படி பல்லாயிரக்கணக்கானவர்களுக்கும் கடந்த ஆண்டில் இந்த வங்கி கடனுதவிசெய்துள்ளது

கடனுதவி பெற்றவர்களில் சுமார் 70 சதவிகிதத்துக்கும் மேற்பட்டவர்கள் தாங்கள் வாங்கிய கடனை திருப்பி செலுத்தி விட்டனர்.

## கல்வி துறையில் அதிக உதவி

ஏற்கனவே வாங்கிய கடனை திருப்பி செலுத்தி விட்டவர்கள் மீண்டும் கடன் பெற்றுள்ளனர்.

நடப்பு ஆண்டில் மட்டும் (1986) ரூபாய் 28 கோடி வரை கடனுதவி செய்ய திட்டமிடப்பட்டுள்ளது' சுமார் 2லட்சத்து 80ஆயிரம் பேர்களுக்கு கடனுதவி செய்யப்படும்.

கல்வித் துறையிலும் ஸ்டேட்பாங்கு கணிசமான நிதி உதவி அளித்துள்ளது. தேர்வில்சிறப்பான முறையில்மதிபெண்கள்எடுத்து வெற்றி பெற்ற மாணவர்களுக்கு பரிசுகள் வழங்கப்பட்டுள்ளன.

கிராமப்புற மக்களின் நல்வாழ்வுக்காக பல்வேறு இடங்களில் சுகாதார முகாம்கள், கண்சிகிச்சை முகாம்கள், ரத்ததானம் செய்வதற்கான முகாம்கள் ஆகியவற்றையும் நடத்தியிருக்கிறது

சுயவேலை வாய்ப்புத் திட்டத்தின் மூலம் சுமார் 6 ஆயிரம் பேருக்கு சென்ற ஆண்டு கடனுதவி அளிக்கப்பட்டுள்ளது.

சமுதாயத்தில் நலிந்தபிரிவினருக்கு கடனுதவி செய்து அவர்களது வாழ்க்கைத் தரத்தை தரமம் படுத்துவதை பாரத ஸ்டேட்பாங்கு தனது தலையாய கடமையாகக் கொண்டிருக்கிறது.

இவ்வாறு தலைமைப் பொது மேலாளர் கூறினார். பாங்கின் பொது மேலாளர் (ஆப்பரேஷன்) வி. எம். டி. ஜோஷி. பிராந்திய மேலாளர் வி.ஜி.கோட்வால் திட்டதுறை பொது மேலாளர் சுரேந்திரசிங் ஆகியோரும் பேட்டியின்போது உடன் இருந்தனா. நிருபர்களின் கேள்விகளுக்கு பதில் அளித்தனர்.

# ரீகனை சந்திக்க கோர்பசேவ் ஆர்வம்

மாஸ்கோ. மார்ச்31 — அணு ஆயுத உற்பத்தி தடை பற்றி பேச்சு நடத்த அமெரிக்க ஜனாதிபதி ரீகனை சந்தித்துப் பேச விரும்புவதாக ரஷ்யத் தலைவர் கோர்பசேவ் அறிவித்துள்ளார்.

டெலிவிஷனில் பேசிய அவர் அணு ஆயுத உற்பத்தியை ரஷ்யா தானாக 7 மாதமாக நிறுத்திவைத்துள்ளது. ஆனால் அமெரிக்கா தொடர்ந்து அணு ஆயுத சோதனை நடத்தியுள்ளது எனவே இது பற்றிப் பேச ரீகனை லண்டனிலோ ரோமிலோ அல்லது வேறு ஐரோப்பிய நாட்டு தலைநகரிலோ சந்திக்க தயாராக இருக்கிறேன் என கோர்பசேவ்கூறினார்

# மனித உரிமைகளுக்கு எதிரான வன்முறை: போப் கண்டனம்

வாடிகன்நகரம். மார்ச 31— மனித உரிமைகளுக்கு எதிராக நடத்தப்படும் கொடுமைகள். வன்முறைகள் ஆகியவற்றிற்கு கண்டனம் தெரிவித்து போப் ஆண்டவர் "ஈஸ்டர்" செய்தி வெளியிட்டுள்ளார்.

ஈஸ்டர்நாளான நேற்று இத்தாலி நாட்டில் வாடிசன் நகரில் உள்ள கிறிஸ்துவ தேவாலயத்தில் உலக கத்தோலிக்க கிறிஸ்துவர்களின் மதத் தலைவரான போப் ஆண்டவர் விசேஷ பிரார்த்தனை நடத்தினார்

இதில் அமெரிக்க வெளிநாட்டு மந்திரிஜார்ஜ் சுல்ட்ஸ், அவரது மனைவி ஹெலிகு ஆகியோரும் கலந்து கொண்டனர்.

போப்ஆண்டவர் தேவாலயத்தில்பிரார்த்தனை நடத்திய போது பலத்த பாதுகாப்பு ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன.

அதன்பிறகு தேவாலயத்தின் சதுக்கத்தில் கூடியிருந்த 2லட்சத்து 50 ஆயிரம் பக்தர்கள் மத்தியில் போப் ஆண்டவர் தனது 'ஈஸ்டர்' செய்தியை வெளியிட்டார்.

அப்போது அவர் கூறியதாவது:-

மனித உரிமைகள் மீறப்படுவதும். மனிதர்கள் ப, கொலை செய்யப்படுவதும் வன்முறையும், சொர்ல்லா யுத்தமும்கண்டிக்கத்தக்கது.

மனிதனின் உலக நடப்புகளின் மீது ஆசை வைக்கும்போதே மரணத்திற்கு தன்னைஒப்படைத்து விடுகிறான்.

இவ்வாறு போப் ஆண்டவா கூறினார்.

# ரீகன்-ஜியா ரகசிய ராணுவ ஒப்பந்தம்

லண்டன், மார்ச் 31— அமெரிக்காவுக்கும் பாகிஸ்தான் அதிபர் ஜியாவுல் ஹக்கிற்கும் இடையே ரகசியமாக ராணுவரீதியான உடன்பாடு உண்டு. அதனால் தான் அமெரிக்கப்போர்க் கப்பல்கள் அண்மையில் பாகிஸ்தானின் மக்ரான் கடற்கரைக்கு வந்தன.

இந்தத் தகவலை லண்டனில் வசிக்கும் பலுச்சிஸ்தான் மாநில முன்னாள்முதல்வர் அப்துலலா மெங்கால் கூறினார்.

பாகிஸ்தானின் மக்ரான் கடற்கரைராணுவமுக்கியத்துவம் வாய்ந்தது ஆப்கானிஸ்தானிற்கும், ஈரானுக்கும் அருகில் உள்ளது மக்ரான கடற்கரையை தளமாகக் கொண்டு இந்த இரண்டு நாடுகளையும் தாக்க முடியும் இந்தியாவின் குஜராத் பகுதியையும் தாக்க முடியும். இவ்வளவு ராணுவ முக்கியத்துவம் வாய்ந்த மக்ரான் கடற்கரைப் பகுதிக்குத் தான் அமெரிக்கப் போர்க் கப்பலகள் வந்துசென்றன

மக்ரான் கடற்கரையில் ராணுவ விமானங்கள் இறங்குவதற்குப் புதிய விமானதளங்கள் அடைக்கப்பட்டுள்ளன அந்தத் தளங்களை எப்படிப்பயன் படுத்துவதுஎன்று அனுபவ பூர்வமாகப் பயிற்சி பெறுவதற்குத் தான் விமானம் தாங்கிஅமெரிக்கப் போர்க் கப்பல்கள் வந்தன என்று மெங்கால் கூறினார்.

ஜியா-உல்-ஹக் எங்கள் நாட்டைப் (பாகிஸ்தானை) எப்போதோ அமெரிக்காவுக்கு அடகு வைத்துவிட்டார் அதன் எதிரொலியாகத் தான் அமெரிக்கப் போர்க்கப்பல்கள் கராச்சி துறைமுகத்திற்கும் மக்ரான்கடற்கரைப்பகுதிக்கும் வந்து சென்றனர்.

அமெரிக்கப் போர்க் கப்பல்களின்வீரர்கள்பொழுது போக்காக கராச்சிக்கு வந்தார்கள் என்று ஜியாவுல் ஹக் கூறுவது அபபட்டமான முழுப் பொய். அபத்தமான வாதம்.

பொழுது போக்க கராச்சியில் என்ன இருக்கிறது? அதனை விட அதிகமான வசதிகள் அமெரிக்கபோர்க் கப்பல்களிலேயே இருக்கின்றன என்று மெங்கால் கூறினார்.

அமெரிக்கப் போர்க் கப்பல்களில் வந்தவர்களுக்கு ஜியா-உல் ஹக் ஒரே ஒரு வசதி செய்து தந்திருக்கிறார் பாகிஸ்தான் முழுமையுமிருந்த விலை மாதர்களை கராச்சியில் கொண்டு வந்து குவித்து பேருதவி செய்து இருக்கிறார் என்றும் மெங்கால் கூறினாா.

## குண்டு வெடித்து 3 பேர் சாவு

வேதாரண்யம்,மார்ச்3'- வேதாரண்யம் அருகே உள்ள வாய் மேட்டில் லட்சுமி வெடிமருந்து தொழிற்சாலை உள்ளது. அங்கு நேற்றிரவு வெடி குண்டு தயாரிக்கும் போது திடீரென்று குண்டு ஒன்று வெடித்தது, இதில் அங்கு வேலை பார்த்து [illegible] டிருந்த ராமச்சந்[illegible]ரன் பட 3பேர் இறந்[illegible] குறித்து போலீச[illegible] விசாரணை நடத்தி[illegible]ன்றனர்

## தமிழ்நாடு அரசு பரிசு சீட்டு
குலுக்கல் முடிவுகள்

227-வது குலுக்கல் முடிவுகள்: நாள்: 30-3-1986
இடம்: இராசாசி மண்டபம் சென்னை-600002

முதல் பரிசு ரூ. 1,00,000
(எல்லா வரிசைக்கும் பொது)
ஓய் கே 383397 - (சென்னை)

இரண்டாம் பரிசு ரூ. 10,000
(முதல் பரிசு பெறாத மற்ற இரு வரிசைகளுக்கும்)
ஓய் ஐ 314128 (சென்னை) ஓய் ஜே 473728 (சென்னை)
(எல்லா வரிசைக்கும் பொது)

மூன்றாம் பரிசு ரூ. 500 (150 பரிசுகள்-கீழ்க்கண்ட கடைசி ஐந்து எண்களில் முடியும் எல்லா பரிசுச் சீட்டுக்களுக்கும்)

15644 18691 41645 43389 50503
67418 88916 92695 96440 97767

நான்காம் பரிசு ரூ. 50 (1,500 பரிசுகள்-கீழ்க்கண்ட கடைசி நான்கு எண்களில் முடியும் எல்லா பரிசுச் சீட்டுக்களுக்கும்)

0051 1299 4381 5743 6549
6630 6761 9240 9784 9961

ஐந்தாம் பரிசு ரூ. 20 (1,500 பரிசுகள்-கீழ்க்கண்ட கடைசி நான்கு எண்களில் முடியும் எல்லா பரிசுச் சீட்டுக்களுக்கும்)

0351 0960 2387 2866 3656
4681 4892 6145 8339 9155

ஆறாம் பரிசு ரூ. 10 (15,000 பரிசுகள்-கீழ்க்கண்ட கடைசி மூன்று எண்களில் முடியும் எல்லா பரிசுச் சீட்டுக்களுக்கும்)

002 272 468 660 804
161 315 528 718 928

ஏழாம் பரிசு ரூ. 5 (60,000 பரிசுகள்-கீழ்க்கண்ட கடைசி மூன்று எண்களில் முடியும் எல்லா பரிசுச் சீட்டுக்களுக்கும்)

006 007 008 067 106 151 196 197 202 217
262 292 319 335 337 394 403 425 455 485
515 517 547 560 602 626 640 677 716 765
796 800 817 845 869 916 777 918 934 947

பரிசுத்தொகை பெற விண்ணப்பிக்க வேண்டிய கடைசி நாள்:-
அரசு கருவூலங்களில்: 27-6-86
இயக்குநர் அலுவலகத்தில்: 25-9-86

அடுத்த 228-வது (தமிழ்ப்புத்தாண்டு) சிறப்புக் குலுக்கல் 6-4-86 அன்று மதுரையில் நடைபெறும்

இயக்குநர். தமிழ்நாடு பரிசுச் சீட்டு துறை
சென்னை—1.